ஸ்ரீ:

# திவ்யப் பிரபந்தம்

# முதலாயிரம்

பதிப்பாசிரியர்:

எஸ். வையாபுரிப் பிள்ளை பி. ஏ., பி. எல்.

வெளியிடுவோர்:

எஸ். ராஜம்

நெ. 5, தம்பு செட்டித் தெரு,

சென்னை - 1

ஸ்ரீ:

# திவ்யப் பிரபந்தம்

## பதிப்புரை

திவ்யப் பிரபந்தம் தென்னாட்டில் நமது வைஷ்ணவப் பெருமக்களால் பெரிதும் போற்றப்படும் சிறந்த பக்தி நூல். இதன் கவிதைச் சுவையும் அழகும் நுகர்ந்து நுகர்ந்து இன்புறத்தக்கன. தமிழ் மக்கள் அனைவருக்கும் பொதுவுடைமையாக இது கொள்ளுதற்குரிய பெருந்தகுதி வாய்ந்தது. பக்திப் பாடல் என்ற நூல் வகையில் இதனைப் போன்ற பெருமையுடைய நூல்கள் இலக்கிய உலகில் மிக மிகச் சிலவற்றைத்தான் கருதுதல் கூடும். இங்ஙனமிருந்தும், நமது தமிழ்ப் பொதுமக்களில் பலர் இதனைக் கல்லாதிருப்பது பெருங் குறையாகும். வைஷ்ணவர்கள் மட்டுமேயன்றித் தமிழ்ப் பொதுமக்களும் இந்நூலைக் கற்றுணர்ந்து பயன் பெறுதல் வேண்டும். இதுவே இப் பதிப்பின் தலைமையான நோக்கம்.

இவ் இலக்கியச் செல்வம் தமிழ்மக்களிடையும், தெலுங்கர் கன்னடர் மலையாளர் முதலியோரிடையும் பரவவேண்டும் என்று வைஷ்ணவப் பெரியார்கள் பக்தி-சிரத்தையுடன் பெரிதும் முயற்சி எடுத்திருக்கின்றனர். இம் முயற்சி இரண்டு நெறியில் சென்றது. ஒன்று மூலபாடம் பற்றியது; மற்றொன்று பொருளுணர்ச்சியைப் பற்றியது. மூலமும் உரையும், வைஷ்ணவ சமயம் பரவப்பரவ, கன்னடம் முதலிய தேசங்களிலும் அங்கங்கேயுள்ள தாய்மொழிகளில் எழுதப் பெற்றுப் பரவி வந்தன. கன்னட மொழியில் நாலாயிரமும் ஏட்டுச் சுவடிகளில் இன்றும் போற்றிப் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன. இங்ஙனமே தெலுங்கிலும் இவைகள் உள்ளன. மலையாளத்தில் திருவாய்மொழி மூலம்மட்டும் வட்டெழுத்தில் உள்ளது. இதன் சுவடி ஒன்றை நானும் பல அன்பர்களும் நேரில் பார்த்ததுண்டு.

பொருளுணர்ச்சியைப் பற்றிய முயற்சிகளில் ஸ்வாபதேசம், அந்யாபதேசம் இரண்டும் குறிக்கத் தக்கன. முந்தியதில் உட்கிடையான பொருளும் பிந்தியதில் வெளிப்படையான பொருளும் விளக்கப் பட்டன. ஆனால், உட்கிடைப் பொருளை வெளிப்படைப் பொருளைக் காட்டிலும் சிறந்ததாக நமது வைஷ்ணவப் பெருமக்கள் கொண்டனர்.

இவ் வியாக்கியானங்களை அவற்றின் ஆசிரியர்கள் மணிப்பிரவாள நடையில் எழுதினர். வடமொழிச் சொற்களையும் தொடர்களையும் கிரந்த லிபியிலும், தமிழ்ப் பகுதியைத் தமிழ் லிபியிலும் அமைத்தனர். ஆனால், கன்னட தேசம் தெலுங்கு தேசம் முதலியவற்றில் அங்கங்கு வழங்கிய மொழிகளில் மூலபாடத்தையும் வியாக்கியானங்களையும் எழுதி வந்தனர்.

தற்காலத்துக் கொள்கைப்படி ஸ்வாபதேசத்தைக் காட்டிலும் அந்யாபதேசமே சிறந்ததாகும். உண்மைக் கவிதை இவ் வெளிப்படைப் பொருளில்தான் உள்ளது என்பர் தற்காலத்து அறிஞர். இதனைமட்டும் தெளிவாக விளக்கும் வியாக்கியானங்கள் மிகச் சிலவே. வடமொழி கலந்த மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்ட இவ் வியாக்கியானங்கள் பொதுமக்களுக்கு உதவவில்லை. இவ்வாறன்றி, தமிழ் மக்கள் அனைவருக்கும் உதவும்படியாக வியாக்கியானங்களை எளிமைப் படுத்தி எழுதத் தொடங்கியவர் வை. மு. சடகோப இராமாநுஜாசாரியர் முதலியோர். இங்ஙனம் பலதிறப்பட்ட பெருமுயற்சிகள் செய்யப்பட்டபோதிலும், வைஷ்ணவ சமயத்தின் மூலாதாரமான இப் பக்திப் பாடல்கள் நமது நாட்டில் நன்கு பரவின எனக் கூறமுடியவில்லை.

வெளிப்படைப் பொருளைத் தெரிந்து கொள்வதற்கும், பலரும் அதன் சுவையை முற்ற அனுபவிப்பதற்கும், பாசுரங்களைப் பாடுதல் வேண்டும். நமது நாட்டில் ஸ்தோத்திரச் செய்யுட்கள் எல்லாம் பாடப் பட்டே வந்தன. திவ்யப் பிரபந்தப் பாசுரங்களும் அந்த நெறியைத் தான் பின்பற்றின. 'பாரத கீதைகளின் வேதோபப்ரும்ஹணத்வம்போலே இதுவும் வ்யாக்யை; ஆனாலும் வேதரஹஸ்யமாம். உதாத்தாதி பதக்ரம ஜடாவாக்ய பஞ்சாதி பாதவ்ருத்த ப்ரச்ந காண்டாஷ்டக காத்யாயனாம்ச பர்வாத்யலங்காரங்கள் போலே, எழுத்து, அசை, சீர், பந்தம், அடி, தொடை, நிரைநிரை, ஓசை, தளையினம், யாப்பு, பாத்துறை, பண்ணிசை, தாளம், பத்து நூறாயிரம் முதலான செய்கோலம் இதுக்குமுண்டு' (பக். 11) எனவரும் ஆசார்ய ஹ்ருதயப் பகுதியால் இது விளங்கும். அந்நெறி நமது நாட்டில் பல இடங்களிலும் அருகி மறைந்துவிட்டது. பொதுமக்களில் வைஷ்ணவத்தில் பற்றுள்ளவர்களும் பிறரும் பாசுரங்களைக் கற்று வந்தனரென்று கூறலாமேயன்றி இசையோடு பாடிவந்தனரல்லர். ஆனால், பாடுதல் இன்றியமையாதது.

'தமிழோடிசை பாடல் மறந்தறியேன்'

என்பது அப்பர் திருவாக்கு.

‘ குருகூர் நம்பி, பாவின் இன்னிசை பாடித் திரிவனே ’

என்பது மதுரகவியாழ்வார் பாசுரப் பகுதி.

‘ பண்ணார் பாடல் இன்கவிகள் யானாய்த் தன்னைத்தான் பாடி
தென்னா என்னும் என்அம்மான் திருமாலிருஞ்சோலையானே ’

என்பது நம்மாழ்வாரது திருவாக்கு. இவை நாயன்மார், ஆழ்வார்கள் இசையோடு பாடினார்கள் என்பதைப் புலப்படுத்தும். இசையின் இயல்பு, முறை முதலியன மறைந்துவிட்டமையினாலே இந்த நெறியும் தமிழ் மக்களால் அறிந்துகொள்ள முடியவில்லை. எனவே, வேறொரு புதிய நெறியை வகுத்தல் இன்றியமையாததாயிற்று.

இப் புதிய நெறியிலும் நமது வைஷ்ணவப் பெரியார்கள் நமக்கு உதவ முயன்றுள்ளார்கள். தமிழ்நாட்டில் ஸ்ரீரங்கம், காஞ்சீபுரம், ஆழ்வார்திருநகரி முதலிய பல திவ்ய தேசங்களிலும் அங்கங்கேயுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்கள் கோஷ்டியாய்க் கூடிப் பிரபந்தங்களைச் சேவிக்கும் வழக்கம் இன்றும் நடைபெறுகிறது. பெருமாள் எழுந்தருளும் போதும், பிற விசேஷ காலங்களிலும் கோயில்களிலும் திருமாளிகைகளிலும் இங்ஙனம் பிரபந்த சேவை நிகழ்வதாகும். இதனால் பிரபந்தப் பாசுரங்கள் பல பிரதேசங்களிலும் பரக்க ஓதப்பெற நேர்ந்தன. நாளடைவில் ஒவ்வொரு வகையாக நிறுத்துமிடங்கள் அறுதியிடப்பட்டன. எந்தச் சேவிப்பு முறையைப் பின்பற்றுதல் வேண்டுமெனக் கண்டு கொள்ளுதலில் இடர்ப்பாடு உண்டு. இவை பொருள்செல் நெறியை உணர்த்தின என்று கருதவும் இடமில்லை. உதாரணமாக, ஸ்ரீ சே. கிருஷ்ணமாச்சாரியார் பதிப்பிலும், அரசாணிபாலை கந்தாடை ஸ்ரீ கிருஷ்ணமாச்சாரியார் பதிப்பிலும்,

மந்திபாய் வடவேங்கட மாமலை* வானவர்கள்
சந்திசெய்ய நின்றான் அரங்கத்துஅரவின் அணையான்
அந்திபோல்நிறத்து ஆடையும் அதன்மேல் அயனைப் படைத்தது ஓர்எழில்*
உந்தி மேலதுஅன்றோ அடியேன் உள்ளத்து இன்னுயிரே. (928)

என்னும் பாசுரத்தில் சேவிப்பு நிறுத்தல்-குறியீடுகளைக் கவனித்து மேற்கூறியதன் உண்மையைத் தெரிந்து கொள்ளலாம். இதுவரை வெளிவந்துள்ள பதிப்புக்களில் காணப்படும் நிறுத்தல்-குறியீடுகளும் மிகச் சிறிதளவே பயன் தருவன. அன்றியும் சேவிப்புமுறை நாளடைவில் அருகிவிடும் என்றே தோன்றுகிறது. ஆகவே, அது பற்றிய அடையாளங்களும் நீடித்த பயனளிப்பன அல்ல.

தற்காலத்து வழங்கும் பதிப்புக்களில் சிறந்த இரண்டினை மேலே குறிப்பிட்டேன். முதன்முதலில் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தை அச்சியற்றியவர் சென்னை ஸ்ரீ ஆழ்வார் ஸபா பிரசங்கியும் பரசமய கோளரியுமாகிய ஸ்ரீமான் முடிச்சூர் அப்பாவு முதலியார் அவர்கள். இப்பதிப்பு குரோதன வருஷத்தில் (1865) தோன்றியது. இப்பதிப்பிலேதான் முதன்முதலாக இராக-தாளங்கள் புதிதாக அமைக்கப்பட்டன. நூல் முகப்பில் ‘ஷை முதலியார் அவர்களால் ஏற்படுத்தப்பட்டும் ஸ்தாபிக்கப்பட்டுமிருந்த இராக-தாளங்கள்’ என்று குறிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, இராக-தாளங்களை முதன்முதல் அமைத்தவர் அப்பாவு முதலியார் அவர்களே. பின்வந்த பதிப்புக்களில் பெரும்பாலன இதனை அடிப்படையாகக்கொண்டு வெளியிடப்பட்டனவே. சேவிப்பு நிறுத்தல்-குறியீடுகள் இப்பதிப்பில் இல்லை என்பது கவனிக்கற்குரியது. இந் நிறுத்தல் முறை பிற்காலத்து அமைக்கப்பட்டதுபோலும்.

இவற்றையெல்லாம் நோக்குவதானால், இவ் இலக்கியச் செல்வத்தைத் தமிழ் மக்கள் அனைவரும் பாடிக் கவிதைச் சுவையில் ஈடுபட வேண்டுமானால், இன்னும் நூதன முறைகளை அனுசரித்து, ஒரு புதிய பதிப்பு வெளிவருதல் வேண்டுமென்று தோன்றியது. இக்கருத்தின் விளைவே இப் பதிப்பாகும்.

இதற்குமுன் அச்சியற்றி வந்துள்ள முறைகளை இங்கே கவனித்தல் அவசியமாகும். ஒரு காலத்தில் அடிவரையறை தெரியக்கூடாதவண்ணமே செய்யுட்களை ஏட்டில் எழுதி வந்தனர். பிற்பாடு அடிவரையறை காட்டப்பட்டது. அச்சில் அடிவரையறையைக் கமா, உடுக்குறி முதலிய குறியீடுகளால் காட்டி வந்தனர். இவ்வகையில்தான் திவ்யப் பிரபந்தப் பதிப்புக்கள் வெகுகாலம் அச்சியற்றப்பெற்று வந்தன. செய்யுட்களை வாசிப்பதில் இம்முறை பெரிதும் பயன்படாமையினாலே, பின்னர் சீர் பிரித்து அச்சிடத் தொடங்கினர். 1934-ல் ஸ்ரீ V. K. ராமாநுஜதாஸன் அவர்கள் முதன் முதலில் திருவாய்மொழியைச் சீர்பிரித்து வெளியிட்டனர். 1952-ல் வெளிவந்த ஸ்ரீ B. இரத்தின நாயகர் ஸன்ஸ் அவர்கள் பதிப்பில் நாலாயிரம் முழுவதும் இங்ஙனமே சீர்பிரிக்கப்பட்டுள்ளது. இம்முறையில் பெரும் பயன் உண்டாயிற்று. செய்யுட்களின் இயல்பு நன்கு புலனாயிற்று. அன்றியும் பிரிப்பதில் செய்யுள் இலக்கணத்தை முக்கியமாகக் கவனித்து வந்தமையினாலே அச்செய்யுட்களில் பிழையிருந்தனவாயின் அவை எளிதில் புலப்படுதற்கும் இடம் ஏற்பட்டது. உதாரணமாக,

செருவாளும் புள்ளாளன் மண்ணாளன் செருச்செய்யும்
நாந்தக மென்னும்
ஒருவாளன் மறையாள னோடாத படையாளன்
விழுக்கை யாளன்
இரவாளன் பகலாள னென்னையாள னேழுலகப்
பெரும்புர வாளன்
திருவாள னினிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற
திருவ ரங்கமே. (420)

இப்பாசுரத்திலே அச்சின் வேறுபாட்டினால் காட்டியவைகள் செய்யுளோசை பிறழ்ந்துள்ளன. ஆகவே, இவற்றில் பிழையுள்ளன என்பது எளிதிற் புலனாம். பிரதிகளில் 'செருச் செய்ய நாந்தகமென்' என்றும், 'செருச்செய்யும் நாந்தக மென்' என்றும், 'செருச் செயும் நாந்தமென்' என்றும், 'ஒழுக்க வாளன்' என்றும், 'எழுவிகற்பப்பெரும் போராளன்' என்றும் 'எனையாளன், ஏழுலகப் பெரும்போராளன்' என்றும், 'எழுவிகற்பப் பெரும் புலவாளன்' என்றும் பாடங்கள் உள்ளன. இவற்றுள் மூன்றாவதாயுள்ள பாடம் செய்யுளின் அமைவிற்குப் பொருத்தமாதல் காணலாம். முதல் முதலில் சீர் பிரித்தவர்கள் இச்சீர்களைக் கவனித்திருப்பார்களானால், பிழைபட்ட பாடங்கள் அச்சிற் புகுந்திருக்க மாட்டா என்பது திண்ணம். மேலே காட்டிய பாசுரத்தில் 'ஒழுக்கவாளன்' 'எழுவிகற்பப் பெரும் போராளன்' என்பவற்றிற்குப் பாட அமைதியும் பொருளும் ஆராயத்தக்கன.

மேலும், சீர்களைப் பிரித்தல் இசை யின்பத்தை உணர்தற்கும் பயன்பட்டது. ஏனெனில் இவ்வின்பம் சீர்களையே முக்கிய நிலைக்களமாகக் கொண்டது. அதனோடு ஆழ்வார்கள் பாடிய காலத்து வழங்கிய இசை பற்றியும் அவ் இன்பம் சிறந்து விளங்கும். ஆழ்வார்களோடு ஏறக்குறையச் சமகாலத்தினராகிய நாயன்மார்களின் திருப்பாடல்கள் இவ் இசை யின்பத்தை உணர்வதற்கும், செய்யுளின்பத்தை உணர்தற்கும் மிகவும் பயன்படுவனவாகும். சிறிது காலத்திற்கு முன் இருந்த அறிஞர்களும் இதை யுணர்ந்து இசை பற்றிய குறிப்புக்கள் தந்துள்ளார்கள். உதாரணமாக, 'பிறந்த வாறும்' என்ற பாசுரத்தின் முகப்பில் 'பண் - காந்தாரம்' என்பதனோடு, 'தாளம் - ஏழொத்து, மோகன ராகம், ஆதி தாளம்' என்ற குறிப்பும் உள்ளது. இதனை 1865-ல் வெளிவந்த ஸ்ரீ அப்பாவு முதலியார் பதிப்பில் காணலாம். ஆனால், இவைகளெல்லாம் சேவிப்பவர்களுக்கும் சந்தை சொல்பவர்

களுக்கும், பொது மக்களுக்கும் விளக்கமற்ற குறிப்புக்களே யாகும். கற்போர்களெல்லாரும் சங்கீத வித்வான்களாக இருக்க முடியுமா ?

சீர் பற்றிப் பிரிப்பதும் இசை பற்றிப் பிரிப்பதும் பொருளுணர்ச்சிக்கு உதவுவன அல்ல. தமிழறிவு மிக்கார்க்கும் இசை-அறிவு உடையார்க்கும் அன்றி ஏனையோர்க்கு இவை பயன்படமாட்டா.

பொருளுணர்ச்சிக்குச் சீர் பிரிப்பதைக் காட்டிலும், சந்தி பிரிப்பது அவசியம். தமிழ் இலக்கணத்தைக் கற்பவர்கள் இக்காலத்தில் அரியர். சந்தி சேர்ந்துள்ள தொடர்களை இவர்கள் பிரிக்க முடியாமல் தடுமாறுகிறார்கள். இம் முயற்சியும் பலராலும் ஒரு நியம மின்றிப் பலபடியாகக் கையாளப்பட்டு வந்துள்ளது. எனவே, இது வேண்டும் பயனை அளிக்கவில்லை. இருபாலார்க்கும் எளிதில் பொருள் உணரக் கூடியபடி செய்யுளை அமைத்தால்தான் தற்காலத்தவர்க்குப் பயன் படுவதாகும். இந்நோக்கம் செய்யுளில் வரும் பதங்களில் பெரும் பாலனவற்றைப் பிரித்தால் அன்றி முற்றுப்பெறாது. இந் நெறியே ஏனையவற்றைக் காட்டிலும் சிறந்தது. அடி பிரித்தல், சீர்பிரித்தல், சீருள்ளே சந்திபிரித்தல், பதங்களைப் பிரித்தல் என வரும் பரிமறுமைக் கிரமப்படியும் இது உண்மையாதல் காணலாம். எனினும், இசையும் ஓரோ இடங்களில் கவனிக்கும்படியாயிற்று. உதாரணமாக, 'அமலனாதிபிரான்' என்ற பாசுரத்தில் இதன் அவசியத்தைக் கண்டுகொள்ளலாம். இங்ஙனமே சீர்களையும் ஒருவாறு தழுவிப் பதங்களைப் பிரித்திருக்கிறது. பொருளுணர்ச்சிக்கு வேண்டும் காமா முதலிய பல வகை நிறுத்தல் - குறியீடுகளும் இடப்பட்டுள்ளன.

இனி, பதங்களைப் பிரித்தல் முதலியன பற்றி இப்பதிப்பில் கையாண்ட நெறிகளில் மிக முக்கியமானவற்றைக் கவனித்தல் வேண்டும். பதங்களைப் பிரிப்பதில் சந்தி முக்கியமான அம்சம். அவற்றுள் ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன். 'இல்' என்பது பல பொருளில் வரும். வீடு, இன்மை, உருபு என்பனவாக வருதலே முக்கியமாகக் கூறலாம். உருபாக வருவதன்பின் வல்லினம் வருமாயின் மிகும், சந்தி பெற்றே வரும். 'திண்ணாக் கலத்திற்றிரை' என்பது திவ்யப் பிரபந்தம் (163). 'புறத்தாற்றிற் போஒய்ப் பெறுவது எவன்' என்பது குறள் (46). இன்மைப் பொருளில் வருமிடத்து மிகச் சந்தி சேர்தல் இல்லை. 'வழுவில் கொடையான்' (திவ்யப். 47), 'ஏதமில் தண்ணுமை' (திவ்ய. 924) 'கோளில் பொறியில்' (குறள் 9) என்பவற்றைக் காண்க. உறழ்ந்து வருதலுங்கூட இவற்றில் கிடையாது;

இயல்பாகவே நிற்கும். இவ் ஈரிடத்தும் வரும் பிரயோகத்தை வேறு பிரித்தறிதல் அவசியமாகும். அன்றியும் உருபேற்ற நிலையில் திரிந்து வரும் எழுத்துக்கள் கடின சந்திகளின் பயனும். இவற்றை நீக்குதலும் வேண்டும். இவ்வகைக் கடின சந்திகளில் வருமொழியின் வடிவமும் விளங்கமாட்டாது. உதாரணமாக, 'திண்ணக் கலத்திற் றிரை' என்பதில் 'றிரை' என்பதன் உண்மை வடிவம் புலப்படுதல் அரிது. ஆகவே, வருஞ் சொல்லின் ரூபம் தெளிவுபட இருத்தல் நல்லது. சந்தியையும் ஒருவாறு காட்டினால்தான் பொருளும் தெளிவுபடும். இதனால் 'கலத்திற் திரை' என்று கொடுப்பதே தகுதி எனக் கொள்ளத்தக்கது. இன்னும் 'பையிற்றுயின்ற' என்ற திருப்பாவைப் பாசுரப் பகுதியில் 'துயின்ற' என்பதனைத் தெளிவுபடுத்திச் சந்தியையும் ஒருவாறு சுட்டி 'பையிற் துயின்ற' என்று அமைக்கப்பட்டுள்ளது. இவற்றை யெல்லாம் கருதியே சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் தமது பதிப்புக்களில் இம்முறையைக் கையாண்டனர். இது போன்ற கடின சந்திகளிலன்றிப் பிறஇடங்களில் எல்லாம் சந்திகள் தெளிவாகவே பிரித்துக் காட்டப்பட்டிருக்கின்றன.

குற்றுகர முற்றுகரச் சந்திகளைப் பிரித்து, உகரங்களை நகவளைவுக் குறிகளுக்குள் அமைத்துத் தற்காலத்தார் பலர் பாடல்களை அச்சிட்டு வருகின்றனர். இதனால் குற்றுகரம் முற்றுகரம் என்ற இலக்கணம் தெரியலாம். மற்றும் வருமொழி இன்னதெனத் தெரிதற்கு இடமுண்டு. செய்யுளோசையை உணர்தற்கும் இது பயன்படுவதாகலாம். ஆனால், செய்யுளோசையில் நோக்கமின்றிப் பதங்களைப் பிரித்து அச்சிடும் தற்கால நெறியில் இவை சிறிதும் பயன்பட மாட்டா. எனவே, உகரங்களைத் தனிப்படக் காட்டும் நெறி கையாளப்படவில்லை.

சந்தி பிரிக்கும்போது சில இடங்களில் செய்யுளிலக்கணமும் ஓசையின்பமும் செவ்வனே அமையாமை காணப்பட்டது. 1865-ம் வருஷம் முதலாக வெளிவந்த அச்சுப் பிரதிகள் பலவும் ஒப்பு நோக்கப்பட்டன. எனினும், உண்மைப் பாடங்களைக் கண்டு கொள்ளுதற்குப் பல கிரந்தப் பிரதி ரூபங்களையும் ஒப்பிடுதல் அவசியமாயிற்று. வானமாமலை மடம், திருக்குறுங்குடி மடம், ஸ்ரீ பெரும்பூதூர், மதுரைத் தமிழ்ச் சங்கம் முதலிய இடங்களினின்று ஸ்ரீ காரப்பங்காடு வேங்கடாசாரியர், ஸ்ரீ N. K. பக்திராஜன் உட்படப் பல அன்பர்கள் பல பிரதிகள் பெற்று உதவினர். சென்னை அரசாங்க நூல் நிலையப் பிரதிகளும், சென்னை அடையாறு நூல் நிலையப் பிரதிகளும் அவற்றின் தலைவர்கள்

தந்து உதவினர். மைசூர் ஸர்வகலாசாலையிலிருந்து கன்னடப் பிரதி ஒன்றைச் சரித்திரப் பேராசிரியர் ஸ்ரீ க. அ. நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள் பெற்று உதவினர். இவற்றுள் வானமாமலை மடத்துப் பிரதிகளும் ஸ்ரீ உ. வே. வித்வான் ஸ்ரீபெரும்பூதூர் ஆசூரி ராமாநுஜாசார்யர் கொடுத்துதவிய பிரதிகளும் மிகவும் பயன்பட்டன. இவற்றையெல்லாம் ஒப்பிடும்போது சில திருத்தமான பாடங்களும் பல பாடபேதங்களும் கிடைத்தன.

பாட ரூப பேதங்கள்பற்றி ஒரு சில கூறுதல் தகும். பாடபேதம் என்று குறிப்பது ஒரு சொல்லுக்குப் பிரதியாக வரும் பிறிதொரு சொல்லை. உதாரணமாக, 'கோளரி மாதவன்' (556) என்பதற்கு 'கோளரி வாமனன்' என்று வருவது போல்வன பாடபேதங்கள். 'துரியோதனன்', 'திரியோதனன்' (175), 'முழுசாதே', 'முழுவாதே' (734) என்று வருவன போல்வன ரூபபேதங்கள். ஒரு சொல்லையே இரண்டு விதமாக வாசித்து உண்மைப் பாடம் இதுவென்று கொள்ளுதலில் மயக்கமடைதலும் உண்டு. 'பரமபுருடா', 'பரம் புருடா' (463) என்று பிரதிகளில் காணப்படுகிறது. சில வடசொற்கள் தமிழில் வல்லின 'றகரம்' முதலிய பெற்று வருதலும் முற்கால வழக்கமாயிருந்தது. 'மார்க்கம்-மாற்கம்'(902), 'மூர்த்தி, மூற்தி' (473) முதலியன உதாரணங்களாம். இவைகளேயன்றிப் பிழையெனக் கொள்ளும் பல சொற்களும் தரப்பட்டுள்ளன. இவற்றில் பெரும்பாலும் வைஷ்ணவ கோஷ்டிகளில் உச்சரித்து வந்த முறையை வெளிப்படுத்துகின்றன. அப்பொழுது பிழையென்ற கருத்தேயின்றிச் சொற்கள் உச்சாரண பேதத்தால் எவ்வாறு மாறி வருகின்றன என்பதே நமக்குமுன் புலப்படுகின்றன. பிழை யென்று முன்பு கொண்டன இப்பொழுது உயிர்த் தத்துவத்தோடு விளங்குகின்றன. இம்முறையைத் தற்காலத்து மொழி நூலில் ஸ்வரசாஸ்திர ஆராய்ச்சியாளர் (Phoneticians) பெரிதும் போற்றுகின்றனர். ஒரு காலத்தில் வழங்கிய உண்மை ரூபம் இன்னது என்பதை ஒருவாறு புலப்படுத்துகின்றன. முதலாயிரம் தோன்றிய காலத்தில் எவ்வாறு வேறுபட்டு வந்தன? சாதாரண மக்கள் எவ்வாறு உச்சரித்து வந்தனர்? என்பதை இவைகளால் வெளிப்படுகின்றன. 'வயிறும்', 'வயறும்' (509), 'தொடர்', 'துடர்' (85), 'செவிடு', 'செகிடு' (481), 'தொலை', 'துலை' (598), 'வெண்ணெய்', 'வெண்ணை' (151) : இவ் ஒலி பேதங்கள் தமிழோடியையபுள்ள தென்னாட்டு மொழிகளில் வடிவு வேறுபாடு

பெற்று இன்றைக்குச் சரியான சொல் என்று கொள்ளப்பட்டுள்ளமையும் இங்கே அறியத்தக்கது. உதாரணமாக, தமிழில் திருத்தமான வடிவம் என்று கொள்ளும் 'சிறுக்கன்' (59) என்பது மலையாளத்தில் 'செறுக்கன்' என்றே வழங்கிவருகிறது. இங்ஙனமே, 'கொங்கை' என்பதனை 'கொங்க' என்று வழங்குவர். இவை போல்வனவற்றைப் பாடரூப பேத அனுபந்தத்தில் காணலாம். ஒலி வடிவினின்றே வரிவடிவம் தோன்றியது என்பதைக் கருதும்பொழுது இது எவ்வளவு முக்கியம் என்பதை நாம் அறிந்து கொள்ளலாம். கால அடைவில் ஒலி வேறுபடுதலும் அவற்றிற்குத்தக வரிவடிவுகள் மாறுதலும் மிகச் சாதாரணமான உண்மைகளாகும். இவ்வகையிலே இப் 'பிழைகளும்' பயன்படும் என்பது உறுதி. இவைகளேயன்றி ஏடு எழுதுவோரால் நேர்ந்த பிழைகளும் பலதிறத்தனவாம். அன்றியும் பாட பரிசோதனையிலும் மூலச்சுவடிகளின் பரிசோதனையிலும் இப் 'பிழைகளை' ஆராய்ந்து வகைப்படுத்துதல் விஞ்ஞான சாஸ்திர நோக்குப்படி இன்றியமையாததாகும்.

தற்காலத்தில் தமிழ்ப் பேராசிரியர்களுள் மிகச் சிறந்தவராகிய இராவ்சாகிப் மு. இராகவையங்கார் அவர்கள் திவ்யப் பிரபந்தப் பாசுரங்களை நுணுகிக் கற்றுத் தமது நுண்ணறிவாலும் பெரும் புலமையாலும் இன்னின்ன பாடங்கள் கொள்ளத்தக்கன வாகலாம் என்று செந்தமிழில் வெளியிட்டுள்ளார்கள். அவைகள் பிரதிகளில் காணுமையினாலே நான் பாடமாகக் கொள்ளவில்லை. ஆனால், அவற்றை ஆராய்ச்சி செய்வது அவசியம் பற்றியும் பிரதிகளில் காணுதல் கூடும் என்ற நம்பிக்கை பற்றியும் பிற் சேர்வாகக் கொடுத்திருக்கிறேன்.

கொள்ளத்தக்க பாடங்களாக ஒருசிலவற்றைத் தந்துள்ளேன். அவைகளும் நோக்கிக்கொள்ளத்தக்கன.

முதலில் நான்கு தொகுதிகளாகத் திவ்யப் பிரபந்தத்தை வெளியிடுதல் வேண்டும் என்றும், நான்காவது தொகுதியில் திவ்யப் பிரபந்தத்தில் வரும் புராண இதிகாசக் கதைகள், இதன் இலக்கியப் பெருமை, ஆழ்வார்கள் வாழ்ந்த வரிசைக்கிரமம், காலம் முதலியன பற்றிய ஆராய்ச்சி, சொல்-தொடர் அகராதி, அரும்பத அகராதி, பண்பற்றிய ஒப்புமைப் பகுதிகள் முதலியவற்றை அமைக்கலாம் என்றும் கருதினேன். ஆனால், நான்கு தொகுதிகள் மூலபாடத்திற்கே தேவையாய் உள்ளன. ஆதலால், ஐந்தாவது தொகுதியில்தான் இவற்றைக் கொடுக்க இயலும். அவ்வாறே செய்ய எண்ணியுள்ளேன்.

சில ஆண்டுகளுக்கு முன்னர், ‘குமரிமலர்’ மூலமாக இவ்வகைப் பதிப்பொன்று வெளியிட முயன்றேன். நான் அயலூர் செல்ல நேரிட்டமையால் அம் முயற்சி நின்றுபோயிற்று. மீண்டும் இதனைத் தொடங்குவதற்கு முக்கிய காரணமாயிருந்தவர் எனது பேரன்பர் ஸ்ரீ எஸ். ராஜம் அவர்களாவர்.

இப்பணியில் அச்சுத்தாள்கள் முதலியவற்றைக் கூர்ந்து நோக்கித் திருத்தங்களை உதவியவர்கள் சிறந்த தமிழறிஞரும் வடமொழி அறிஞருமாகிய ஸ்ரீ வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியர் அவர்களும், சிறந்த இலக்கிய இலக்கண வித்வானுகிய ஸ்ரீ வே. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்களும், சிறந்த மொழிபெயர்ப்பாசிரியரும் விஞ்ஞானப் பேராசிரியருமாகிய அட்வொகேட் ஸ்ரீ பெ. நா. அப்புஸ்வாமி அய்யர் அவர்களும் ஆவர். இவர்களுக்கும் ஏட்டுப் பிரதிகள் முற்பதிப்புக்கள் முதலியவற்றை உதவிய அன்பர்களுக்கும் எனது நன்றி.

காரப்பங்காடு ஸ்ரீ வேங்கடாச்சாரியர் அவர்கள் வேண்டும்போது தக்க ஆலோசனைகள் கூறி, ஊக்கமளித்து வந்தார்கள். பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராச்சாரியர் அவர்களும் எனது வேண்டுகோள்படி ஒருமுறை வந்து இப்பதிப்பு விஷயமாகக் கலந்து, நமக்குத் தோன்றிய சீர்திருத்தங்களைக் கூறினார்கள். இப்பெரியார்களுக்கும் எனது நன்றி உரித்தாகிறது. இவ்வாறும் கடிதமூலமாகவும் பிறவாறும் எனது முயற்சியை ஊக்கி வந்த அன்பர்கள் அனைவருக்கும் எனது மனப்பூர்வமான நன்றி.

இங்ஙனமாக, எத்தனையோ வகைகளில் முயற்சிசெய்து இப் பதிப்பு தயாரிக்கப்பட்டுள்ளது. எனினும், இதிலுள்ள பாடங்கள் அறுதியாய் முடிவுகட்டப்பட்டன என்று நான் கூறத் துணிய மாட்டேன். இன்னும் வைஷ்ணவப் பெரியார்களும் பிற ஆராய்ச்சியாளர்களும் தக்க பாடங்களை ஆதாரத்துடன் தருவரேல், அவற்றைச் சீர்தூக்கி மேற்கொள்ளுதலிலும் எனது நன்றியைத் தெரிவிக்க நான் காலந்தாழ்க்கமாட்டேன்.

எனது பதிப்பு முயற்சிகள் யாவும் இனிது நிறைவேறுதற்கு இறைவன் அருள்புரிக.

கம்பன் நிலயம்
சென்னை - 20
25—12—'55

எஸ். வையாபுரிப் பிள்ளை

# உள்ளுறை

## பெரியாழ்வார்

பக்கம்

ஸ்ரீ:

## பெரியாழ்வார் அருளிச்செய்த

# திருப்பல்லாண்டு

### காப்பு

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு,
பல கோடி நூறாயிரம்,
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா! உன்
சேவடி செவ்வி திருக்காப்பு.

---

அடியோமோடும் நின்னோடும் பிரிவு இன்றி
ஆயிரம் பல்லாண்டு;
வடிவாய் நின் வல மார்வினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு;
வடிவார் சோதி வலத்து உறையும் சுடர்
ஆழியும் பல்லாண்டு;
படைபோர் புக்கு முழங்கும் அப் பாஞ்ச-
சனியமும் பல்லாண்டே. ௧

வாழாட்பட்டு நின்றீர் உள்ளீரேல், வந்து
மண்ணும் மணமும் கொண்மின்;
கூழாட்பட்டு நின்றீர்களை எங்கள்
குழுவினிற் புகுதலொட்டோம்;
ஏழாட்காலும் பழிப்பு இலோம் நாங்கள்:
இராக்கதர் வாழ் இலங்கை
பாழாள் ஆகப் படை பொருதானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே. ௨

ஏடு நிலத்தில் இடுவதன் முன்னம் வந்து
எங்கள் குழாம் புகுந்து
கூடு மனம் உடையீர்கள்! வரம்பு ஒழி
வந்து ஒல்லைக் கூடுமினோ;
நாடும் நகரமும் நன்கு அறிய நமோ
நாராயணாய என்று
பாடு மனம் உடைப் பத்தருள்ளீர்! வந்து
பல்லாண்டு கூறுமினே. ௩

அண்டக் குலத்துக்கு அதிபதி ஆகி,
அசுரர் இராக்கதரை
இண்டக் குலத்தை எடுத்துக் களைந்த
இருடிகேசன் தனக்கு,
தொண்டக் குலத்தில் உள்ளீர்! வந்து அடிதொழுது
ஆயிர நாமம் சொல்லிப்
பண்டைக் குலத்தைத் தவிர்ந்து பல்லாண்டு பல்-
லாயிரத்தாண்டு என்மினே. 4

எந்தை தந்தை தந்தை தந்தை தம் மூத்தப்பன்
ஏழ்படிகால் தொடங்கி
வந்து வழிவழி ஆட்செய்கின்றோம்; திரு-
வோணத் திருவிழவில்
அந்தியம் போதில் அரியுரு ஆகி
அரியை அழித்தவனைப்
பந்தனை தீரப் பல்லாண்டு பல்லாயிரத்-
தாண்டு என்று பாடுதுமே. 5

தீயிற் பொலிகின்ற செஞ்சுடர் ஆழி
திகழ் திருச்சக்கரத்தின்
கோயிற் பொறியாலே ஒற்றுண்டு நின்று
குடிகுடி ஆட்செய்கின்றோம்;
மாயப் பொருபடை வாணனை ஆயிரந்
தோளும் பொழி குருதி
பாயச் சுழற்றிய ஆழி வல்லானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே. 6

நெய்யிடை நல்லதோர் சோறும் நியதமும்
அத்தாணிச் சேவகமும்
கை அடைக்காயும் கழுத்துக்குப் பூணொடு
காதுக்குக் குண்டலமும்
மெய்யிட நல்லதோர் சாந்தமும் தந்து, என்னை
வெள்ளுயிர் ஆக்கவல்ல
பையுடை நாகப்பகைக் கொடியானுக்குப்
பல்லாண்டு கூறுவனே. 7

உடுத்துக் களைந்த நின் பீதக ஆடை
    உடுத்து, கலத்தது உண்டு,
தொடுத்த துழாய்மலர் சூடிக் களைந்தன
    சூடும் இத் தொண்டர்களோம் ;
விடுத்த திசைக் கருமம் திருத்தித் திரு-
    வோணத் திருவிழவில்
படுத்த பைந் நாகணைப் பள்ளி கொண்டானுக்குப்
    பல்லாண்டு கூறுதுமே. 8

எந்நாள் எம்பெருமான் உன்தனக்கு அடி-
    யோம் என்று எழுத்துப்பட்ட
அந்நாளே, அடியோங்கள் அடிக்குடில்
    வீடுபெற்று உய்ந்தது காண் ;
செந்நாள் தோற்றித் திரு மதுரையிற்
    சிலை குனித்து ஐந்தலைய
பைந்நாகத் தலைப் பாய்ந்தவனே ! உன்னைப்
    பல்லாண்டு கூறுதுமே. 9

அல்வழக்கு ஒன்றும் இல்லா அணி கோட்டியர்-
    கோன் அபிமானதுங்கன்
செல்வனைப் போல, திருமாலே! நானும்
    உனக்குப் பழ அடியேன் ;
நல் வகையால் நமோ நாராயணா என்று
    நாமம் பல பரவி,
பல் வகையாலும் பவித்திரனே! உன்னைப்
    பல்லாண்டு கூறுவனே. 10

பல்லாண்டு என்று பவித்திரனைப் பர-
    மேட்டியைச் சார்ங்கம் என்னும்
வில் ஆண்டான்தன்னை வில்லிபுத்தூர் விட்டு-
    சித்தன் விரும்பிய சொல்
நல் ஆண்டு என்று நவின்று உரைப்பார் நமோ
    நாராயணாய என்று
பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்து
    ஏத்துவர் பல்லாண்டே. 11

# பெரியாழ்வார் திருமொழி

## 1, 1

### கண்ணன் திருவவதாரம்

வண்ண மாடங்கள் சூழ் திருக்கோட்டியூர்க்
கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்,
எண்ணெய் சுண்ணம் எதிரெதிர் தூவிடக்
கண்ணன் முற்றம் கலந்து அளறு ஆயிற்றே. 1

ஓடுவார், விழுவார், உகந்து ஆலிப்பார்,
நாடுவார், நம்பிரான் எங்குத்தான் என்பார்;
பாடுவார்களும் பல்பறை கொட்ட நின்று
ஆடுவார்களும் ஆயிற்று ஆய்ப்பாடியே. 2

பேணிச் சீர் உடைப் பிள்ளை பிறந்தினில்
காணத் தாம் புகுவார், புக்குப் போதுவார்;
ஆண் ஒப்பார் இவன் நேர் இல்லை காண், திரு-
வோணத்தான் உலகு ஆளும் என்பார்களே. 3

உறியை முற்றத்து உருட்டி நின்று ஆடுவார்,
நறுநெய் பால் தயிர் நன்றாகத் தூவுவார்,
செறி மென் கூந்தல் அவிழத் திளைத்து எங்கும்
அறிவு அழிந்தனர் ஆய்ப்பாடி ஆயரே. 4

கொண்ட தாள்உறி கோலக் கொடுமழுத்
தண்டினர், பறியோலைச் சயனத்தர்,
விண்ட முல்லையரும்பு அன்ன பல்லினர்,
அண்டர் மிண்டிப் புகுந்து நெய்யாடினார். 5

கையும் காலும் நிமிர்த்துக் கடார நீர்
பைய ஆட்டிப் பசுஞ் சிறு மஞ்சளால்
ஐய நா வழித்தாளுக்கு அங்காந்திட,
வையம் ஏழும் கண்டாள் பிள்ளை வாயுளே. 6

வாயுள் வையகம் கண்ட மடநல்லார்
ஆயர் புத்திரன் அல்லன், அருந்தெய்வம்;
பாய சீர் உடைப் பண்பு உடைப் பாலகன்
மாயன் : என்று மகிழ்ந்தனர் மாதரே. 7

பத்து நாளும் கடந்த இரண்டாம் நாள்,
எத் திசையும் சயமரம் கோடித்து,
மத்த மா மலை தாங்கிய மைந்தனை
உத்தானம் செய்து உகந்தனர் ஆயரே. 8

கிடக்கில், தொட்டில் கிழிய உதைத்திடும்;
எடுத்துக் கொள்ளில், மருங்கை இறுத்திடும்;
ஒடுக்கிப் புல்கில், உதரத்தே பாய்ந்திடும்;
மிடுக்கு இலாமையால் நான் மெலிந்தேன், நங்காய்! 9

செந்நெல் ஆர் வயல் சூழ் திருக்கோட்டியூர்
மன்னு நாரணன் நம்பி பிறந்தமை
மின்னு நூல் விட்டுசித்தன் விரித்த இப்
பன்னு பாடல் வல்லார்க்கு இல்லை பாவமே. 10

## பெரியாழ்வார் திருமொழி

## 1, 2

### கண்ணனது திருமேனியழகு

சீதக் கடலுள் அமுது அன்ன தேவகி
கோதைக் குழலாள் அசோதைக்குப் போத்தந்த
பேதைக் குழவி பிடித்துச் சுவைத்து உண்ணும்
பாதக் கமலங்கள் காணீரே,
பவள வாயீர்! வந்து காணீரே! 1

முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னும்
தத்திப் பதித்துத் தலைப்பெய்தாற் போல், எங்கும்
பத்து விரலும் மணிவண்ணன் பாதங்கள்
ஒத்திட்டு இருந்தவா காணீரே,
ஒண்ணுதலீர்! வந்து காணீரே! 2

பணைத்தோள் இள ஆய்ச்சி பால் பாய்ந்த கொங்கை
அணைத்து ஆர உண்டு கிடந்த இப் பிள்ளை
இணைக்காலில் வெள்ளித் தளை நின்று இலங்கும்
கணைக்கால் இருந்தவா காணீரே,
காரிகையீர்! வந்து காணீரே! 3

உழந்தாள் நறுநெய் ஓரோர் தடா உண்ண,
இழந்தாள் எரிவினால் ஈர்த்து, எழில் மத்தின்
பழந் தாம்பால் ஓச்ச, பயத்தால் தவழ்ந்தான்
முழந்தாள் இருந்தவா காணீரே,
முகிழ்முலையீர்! வந்து காணீரே! 4

பிறங்கிய பேய்ச்சி முலை சுவைத்து உண்டிட்டு
உறங்குவான் போலே கிடந்த இப் பிள்ளை
மறம் கொள் இரணியன் மார்வை முன் கீண்டான்
குறங்குகளை வந்து காணீரே,
குவிமுலையீர்! வந்து காணீரே! 5

மத்தக் களிற்று வசுதேவர் தம்முடைச்
சித்தம் பிரியாத தேவகிதன் வயிற்றில்
அத்தத்தின் பத்தாம் நாள் தோன்றிய அச்சுதன்
முத்தம் இருந்தவா காணீரே,
முகிழ்நகையீர்! வந்து காணீரே! 6

இருங்கை மதகளிறு ஈர்க்கின்றவனைப்
பருங்கிப் பறித்துக்கொண்டு ஓடும் பரமன்தன்
நெருங்கு பவளமும் நேர்நாணும் முத்தும்
மருங்கும் இருந்தவா காணீரே,
வாணுதலீர்! வந்து காணீரே! 7

வந்த மதலைக் குழாத்தை வலிசெய்து
தந்தக் களிறு போல் தானே விளையாடும்
நந்தன் மதலைக்கு நன்றும் அழகிய
உந்தி இருந்தவா காணீரே,
ஒளியிழையீர்! வந்து காணீரே! 8

அதிருங் கடல்நிற வண்ணனை ஆய்ச்சி
மதுர முலை ஊட்டி வஞ்சித்து வைத்துப்
பதறப் படாமே பழந் தாம்பால் ஆர்த்த
உதரம் இருந்தவா காணீரே,
ஒளிவளையீர்! வந்து காணீரே! 9

பெரு மா உரலிற் பிணிப்புண்டு இருந்து அங்கு
இரு மா மருதம் இறுத்த இப் பிள்ளை
குரு மா மணிப்பூண் குலாவித் திகழும்
திருமார்வு இருந்தவா காணீரே,
சேயிழையீர்! வந்து காணீரே! 10

நாள்கள் ஓர் நாலைந்து திங்கள் அளவிலே,
தாளை நிமிர்த்துச் சகடத்தைச் சாடிப்போய்
வாள் கொள் வளையெயிற்று ஆருயிர் வவ்வினான்
தோள்கள் இருந்தவா காணீரே,
சுரிகுழலீர்! வந்து காணீரே! 11

மைத் தடங்கண்ணி யசோதை வளர்க்கின்ற
செய்த்தலை நீல நிறத்துச் சிறுப்பிள்ளை
நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய
கைத்தலங்கள் வந்து காணீரே,
கனங்குழையீர்! வந்து காணீரே! 12

வண்டு அமர் பூங்குழல் ஆய்ச்சி மகனைக்
கொண்டு வளர்க்கின்ற கோவலக் குட்டற்கு
அண்டமும் நாடும் அடங்க விழுங்கிய
கண்டம் இருந்தவா காணீரே,
காரிகையீர்! வந்து காணீரே! 13

எம் தொண்டை வாய்ச் சிங்கம் வா என்று எடுத்துக்கொண்டு
அந் தொண்டை வாய் அமுது ஆதரித்து ஆய்ச்சியர்
தம் தொண்டை வாயால் தருக்கிப் பருகும் இச்
செந் தொண்டை வாய் வந்து காணீரே,
சேயிழையீர்! வந்து காணீரே! 14

நோக்கி யசோதை நுணுக்கிய மஞ்சளால்
நாக்கு வழித்து நீராட்டும் இந் நம்பிக்கு
வாக்கும் நயனமும் வாயும் முறுவலும்
மூக்கும் இருந்தவா காணீரே,
மொய்குழலீர்! வந்து காணீரே! 15

விண் கொள் அமரர்கள் வேதனை தீர முன்
மண் கொள் வசுதேவர்தம் மகனாய் வந்து
திண் கொள் அசுரரைத் தேய வளர்கின்றான்
கண்கள் இருந்தவா காணீரே,
கனவளையீர்! வந்து காணீரே! 16

பருவம் நிரம்பாமே பாரெல்லாம் உய்யத்
திருவின் வடிவு ஒக்கும் தேவகி பெற்ற
உருவு கரிய ஒளி மணிவண்ணன்
புருவம் இருந்தவா காணீரே,
பூண்முலையீர்! வந்து காணீரே! 17

மண்ணும் மலையும் கடலும் உலகு ஏழும்
உண்ணுந் திறந்து மகிழ்ந்து உண்ணும் பிள்ளைக்கு
வண்ணம் எழில்கொள் மகரக்குழை இவை
திண்ணம் இருந்தவா காணீரே,
சேயிழையீர்! வந்து காணீரே! 18

முற்றிலும் தூதையும் முன்கைமேல் பூவையும்
சிற்றில் இழைத்துத் திரிதருவோர்களைப்
பற்றிப் பறித்துக்கொண்டு ஓடும் பரமன்தன்
நெற்றி இருந்தவா காணீரே,
நேரிழையீர்! வந்து காணீரே! 19

அழகிய பைம்பொன்னின் கோல் அங்கைக் கொண்டு
கழல்கள் சதங்கை கலந்து எங்கும் ஆர்ப்ப
மழ கன்றினங்கள் மறித்துத் திரிவான்
குழல்கள் இருந்தவா காணீரே,
குவிமுலையீர்! வந்து காணீரே! 20

சுருப்பார் குழலி யசோதை முன் சொன்ன
திருப் பாதகேசத்தைத் தென்புதுவைப் பட்டன்
விருப்பால் உரைத்த இருபதோடு ஒன்றும்
உரைப்பார் போய் வைகுந்தத்து ஒன்றியிருப்பரே. 21

## பெரியாழ்வார் திருமொழி

## 1, 3

### தாலப் பருவம்

மாணிக்கம் கட்டி வயிரம் இடை கட்டி
ஆணிப் பொன்னால் செய்த வண்ணச் சிறுத்தொட்டில்
பேணி உனக்குப் பிரமன் விடுதந்தான்;
மாணிக் குறளனே! தாலேலோ!
வையம் அளந்தானே! தாலேலோ! 1

உடையார் கனமணியோடு ஒண் மாதுளம்பூ
இடை விரவிக் கோத்த எழிற் தெழ்கிணோடும்
விடை ஏறு காபாலி ஈசன் விடுதந்தான்;
உடையாய்! அழேல் அழேல் தாலேலோ!
உலகம் அளந்தானே! தாலேலோ! 2

என்தம்பிரானார் எழிற் திருமார்வற்குச்
சந்தம் அழகிய தாமரைத் தாளற்கு,
இந்திரன்தானும் எழில் உடைக் கிண்கிணி
தந்து உவனாய் நின்றான்; தாலேலோ!
தாமரைக் கண்ணனே! தாலேலோ! 3

சங்கின் வலம்புரியும் சேவடிக் கிண்கிணியும்
அங்கைச் சரிவளையும் நாணும் அரைத்தொடரும்
அங்கண் விசும்பில் அமரர்கள் போத்தந்தார்,
செங்கண் கருமுகிலே! தாலேலோ!
தேவகி சிங்கமே! தாலேலோ! 4

எழில் ஆர் திருமார்வுக்கு ஏற்கும் இவை என்று
அழகிய ஐம்படையும் ஆரமும் கொண்டு
வழு இல் கொடையான் வயிச்சிரவணன்
தொழுது உவனாய் நின்றான்; தாலேலோ!
தூமணி வண்ணனே! தாலேலோ! 5

ஓதக் கடலின் ஒளிமுத்தின் ஆரமும்
சாதிப் பவளமும் சந்தச் சரிவளையும்
மா தக்க என்று வருணன் விடுதந்தான்,
சோதிச் சுடர் முடியாய்! தாலேலோ!
சுந்தரத் தோளனே! தாலேலோ! 6

கான் ஆர் நறுந்துழாய் கைசெய்த கண்ணியும்
வான் ஆர் செழுஞ்சோலைக் கற்பகத்தின் வாசிகையும்
தேன் ஆர் மலர்மேல் திருமங்கை போத்தந்தாள்,
கோனே! அழேல் அழேல், தாலேலோ!
குடந்தைக் கிடந்தானே! தாலேலோ! 7

கச்சொடு பொற்சுரிகை காம்பு கனகவளை
உச்சி மணிச்சுட்டி ஒண் தாள் நிரைப் பொற்பூ
அச்சுதனுக்கு என்று அவனியாள் போத்தந்தாள்,
நச்சுமுலை உண்டாய்! தாலேலோ!
நாராயணா! அழேல், தாலேலோ! 8

மெய் திமிரும் நானப் பொடியொடு மஞ்சளும்
செய்ய தடங்கண்ணுக்கு அஞ்சனமும் சிந்துரமும்
வெய்ய கலைப்பாகி கொண்டு உவளாய் நின்றாள்,
ஐயா! அழேல் அழேல், தாலேலோ!
அரங்கத்து அணையானே! தாலேலோ! 9

வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலை உண்ட
அஞ்சன வண்ணனை ஆய்ச்சி தாலாட்டிய
செஞ்சொல் மறையவர் சேர் புதுவைப் பட்டன் சொல்
எஞ்சாமை வல்லவர்க்கு இல்லை இடர்தானே. 10

## பெரியாழ்வார் திருமொழி

### 1, 4

### அம்புலிப் பருவம்

*தன்முகத்துச் சுட்டி தூங்கத் தூங்கத்*
*தவழ்ந்து போய்ப்*
*பொன்முகக் கிண்கிணி ஆர்ப்பப் புழுதி*
*அளைகின்றான் ;*
*என்மகன் கோவிந்தன் கூத்தினை இள*
*மா மதீ!*
*நின்முகம் கண்ணுள ஆகில், நீ இங்கே*
*நோக்கிப் போ.* 1

*என் சிறுக்குட்டன் எனக்கு ஓர் இன்னமுது*
*எம்பிரான்*
*தன் சிறுக்கைகளால் காட்டிக் காட்டி*
*அழைக்கின்றான் ;*
*அஞ்சன வண்ணனோடு ஆடல் ஆட*
*உறுதியேல்,*
*மஞ்சில் மறையாதே, மா மதீ! மகிழ்ந்து*
*ஓடி வா.* 2

*சுற்றும் ஒளிவட்டம் சூழ்ந்து சோதி*
*பரந்து எங்கும்*
*எத்தனை செய்யிலும் என்மகன் முகம்*
*நேரொவ்வாய் ;*
*வித்தகன் வேங்கட வாணன் உன்னை*
*விளிக்கின்ற*
*கைத்தலம் நோவாமே, அம்புலீ! கடிது*
*ஓடி வா.* 3

*சக்கரக் கையன் தடங்கண்ணால் மலர*
*விழித்து*
*ஒக்கலைமேல் இருந்து உன்னையே சுட்டிக்*
*காட்டும், காண் ;*
*தக்கது அறிதியேல், சந்திரா! சலம்*
*செய்யாதே ;*
*மக்கட் பெறாத மலடன் அல்லையேல்,*
*வா, கண்டாய்.* 4

அழகிய வாயில் அமுத ஊறல்
தெளிவுற
மழலை முற்றாத இளஞ்சொல்லால் உன்னைக்
கூகின்றான் ;
குழகன் சிரீதரன் கூவக் கூவ நீ
போதியேல்,
புழையில ஆகாதே நின்செவி, புகர்
மா மதீ! 5

தண்டொடு சக்கரம் சார்ங்கம் ஏந்தும்
தடக்கையன்
கண் துயில்கொள்ளக் கருதிக் கொட்டாவி
கொள்கின்றான் ;
உண்ட முலைப்பால் அறா கண்டாய் உறங்-
காவிடில்,
விண்தனில் மன்னிய மா மதீ! விரைந்து
ஓடி வா. 6

பாலகன் என்று பரிபவம் செய்யேல்,
பண்டு ஓர் நாள்
ஆலின் இலை வளர்ந்த சிறுக்கன்
அவன் இவன் ;
மேல் எழப் பாய்ந்து பிடித்துக்கொள்ளும்
வெகுளுமேல்,
மாலை மதியாதே, மா மதீ! மகிழ்ந்து
ஓடி வா. 7

சிறியன் என்று என் இளஞ் சிங்கத்தை இக-
ழேல் கண்டாய்,
சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச்
சென்று கேள் ;
சிறுமைப் பிழை கொள்ளில் நீயும் உன் தேவைக்கு
உரியை காண் ;
நிறைமதீ! நெடுமால் விரைந்து உன்னைக்
கூகின்றான். 8

தாழியில் வெண்ணெய் தடங்கை ஆர
விழுங்கிய
பேழை வயிற்று எம்பிரான் கண்டாய், உன்னைக்
கூகின்றான் ;
ஆழிகொண்டு உன்னை எறியும், ஐயுறவு
இல்லை காண்,
வாழ உறுதியேல், மா மதீ! மகிழ்ந்து
ஓடி வா. 9

மைத்தடங் கண்ணி யசோதை தன்மகனுக்கு இவை
ஒத்தன சொல்லி உரைத்த மாற்றம் ஒளிபுத்தூர்
வித்தகன் விட்டுசித்தன் விரித்த தமிழ் இவை
எத்தனையும் சொல்ல வல்லவர்க்கு இடர் இல்லையே. 10

## பெரியாழ்வார் திருமொழி

### 1, 5

#### செங்கீரைப் பருவம்

உய்ய உலகு படைத்து உண்ட மணிவயிறா!
ஊழிதொறு ஊழி பல ஆலின் இலையதன்மேல்
பைய உயோகு-துயில் கொண்ட பரம்பரனே!
பங்கய நீள்நயனத்து அஞ்சன மேனியனே!
செய்யவள் நின் அகலம் சேமம் எனக் கருதி,
செல்வு பொலி மகரக் காது திகழ்ந்து இலக,
ஐய! எனக்கு ஒருகால், ஆடுக செங்கீரை,
ஆயர்கள் போரேறே! ஆடுக, ஆடுகவே. 1

கோளரியின் உருவங் கொண்டு அவுணன் உடலம்
குருதி குழம்பி எழ, கூர்உகிரால் குடைவாய்!
மீள அவன்மகனை மெய்ம்மை கொளக் கருதி:
மேலை அமரர்பதி மிக்கு வெகுண்டு வரக்
காள நன் மேகமவை கல்லொடு கால் பொழியக்
கருதி வரை குடையாக் காலிகள் காப்பவனே!
ஆள! எனக்கு ஒருகால், ஆடுக செங்கீரை,
ஆயர்கள் போரேறே! ஆடுக, ஆடுகவே. 2

நம்முடை நாயகனே! நான்மறையின் பொருளே!
நாபியுள் நற்கமல நான்முகனுக்கு ஒருகால்
தம்மனை ஆனவனே! தரணி தலமுழுதும்
தாரகையின் உலகும் தடவி அதன் புறமும்
விம்ம வளர்ந்தவனே! வேழமும் ஏழ் விடையும்
விரவிய வேலைதனுள் வென்று வருமவனே!
அம்ம! எனக்கு ஒருகால், ஆடுக செங்கீரை,
ஆயர்கள் போரேறே! ஆடுக, ஆடுகவே. 3

வானவர்தாம் மகிழ, வன் சகடம் உருள,
வஞ்ச முலைப்பேயின் நஞ்சம்அது உண்டவனே!
கானக வல் விளவின் காய் உதிரக் கருதிக்
கன்றுஅது கொண்டு எறியும் கருநிற என்கன்றே!
தேனுகனும் முரனும் திண்திறல் வெந்நரகன்
என்பவர் தாம் மடியச் செரு அதிரச் செல்லும்
ஆனை! எனக்கு ஒருகால், ஆடுக செங்கீரை,
ஆயர்கள் போரேறே! ஆடுக, ஆடுகவே. 4

மத்து அளவுந் தயிரும் வார்குழல் நன்மடவார்
வைத்தன நெய் களவால் வாரி விழுங்கி ஒருங்கு
ஒத்த இணைமருதம் உன்னிய வந்தவரை
ஊரு கரத்தினொடும் உந்திய வெந்திறலோய்!
முத்தின் இளமுறுவல் முற்ற வருவதன்முன்
முன்ன முகத்து அணிஆர் மொய்குழல்கள் அலைய,
அத்த! எனக்கு ஒருகால், ஆடுக செங்கீரை,
ஆயர்கள் போரேறே! ஆடுக, ஆடுகவே. 5

காய மலர்நிறவா! கருமுகில் போல் உருவா!
கானக மா மடுவிற் காளியன் உச்சியிலே
தூய நடம் பயிலும் சுந்தர! என்சிறுவா!
துங்க மதக்கரியின் கொம்பு பறித்தவனே!
ஆயம் அறிந்து பொருவான் எதிர்வந்த மல்லை
அந்தரம் இன்றி அழித்து ஆடிய தாளிணையாய்!
ஆய! எனக்கு ஒருகால், ஆடுக செங்கீரை,
ஆயர்கள் போரேறே! ஆடுக, ஆடுகவே. 6

துப்பு உடை ஆயர்கள்தம் சொல் வழுவாது ஒருகால்
தூய கருங்குழல் நற் தோகைமயில் அனைய
நப்பினைதன் திறமா நல் விடை ஏழ் அவிய
நல்ல திறல் உடைய நாதனும் ஆனவனே!
தப்பின பிள்ளைகளைத் தனமிகு சோதிபுகத்
தனி ஒரு தேர் கடவித் தாயொடு கூட்டிய என்
அப்ப! எனக்கு ஒருகால், ஆடுக செங்கீரை,
ஆயர்கள் போரேறே! ஆடுக, ஆடுகவே. 7

உன்னையும் ஒக்கலையிற் கொண்டு தம் இல் மருவி
உன்னொடு தங்கள் கருத்து ஆயின செய்து வரும்
கன்னியரும் மகிழ, கண்டவர் கண்குளிர,
கற்றவர் தெற்றிவர, பெற்ற எனக்கு அருளி
மன்னு குறுங்குடியாய்! வெள்ளறையாய்! மதில் சூழ்
சோலைமலைக்கு அரசே! கண்ணபுரத்து அமுதே!
என் அவலம் களைவாய்! ஆடுக செங்கீரை,
ஏழ் உலகும் உடையாய்! ஆடுக, ஆடுகவே. 8

பாலொடு நெய் தயிர் ஒண் சாந்தொடு சண்பகமும்
பங்கயம் நல்ல கருப்பூரமும் நாறி வர,
கோல நறும்பவளச் செந்துவர் வாயினிடைக்
கோமள வெள்ளிமுளை போல் சில பல் இலக,
நீல நிறத்து அழகார் ஐம்படையின் நடுவே
நின் கனிவாய் அமுதம் இற்று முறிந்து விழ,
ஏலும் மறைப்பொருளே! ஆடுக செங்கீரை,
ஏழ் உலகும் உடையாய்! ஆடுக, ஆடுகவே. 9

செங்கமலக் கழலிற் சிற்றிதழ் போல் விரலிற்
சேர் திகழ் ஆழிகளும் கிண்கிணியும், அரையிற்
தங்கிய பொன்வடமும் தாள நன் மாதுளையின்
பூவொடு பொன்மணியும், மோதிரமும் கிறியும்
மங்கல ஐம்படையும் தோள்வளையும் குழையும்
மகரமும் வாளிகளும் சுட்டியும் ஒத்து இலக,
எங்கள் குடிக்கு அரசே! ஆடுக செங்கீரை,
ஏழ் உலகும் உடையாய்! ஆடுக, ஆடுகவே. 10

அன்னமும் மீன் உருவும் ஆளரியும் குறளும்
ஆமையும் ஆனவனே ! ஆயர்கள் நாயகனே !
என் அவலம் களைவாய் ! ஆடுக செங்கீரை
ஏழ் உலகும் உடையாய்! ஆடுக, ஆடுக என்று
அன்னநடை மடவாள் அசோதை உகந்த பரிசு
ஆன புகழ்ப் புதுவைப் பட்டன் உரைத்த தமிழ்
இன்னிசை மாலைகள் இப் பத்தும் வல்லார் உலகில்
எண்திசையும் புகழ் மிக்கு இன்பம்அது எய்துவரே. 11

## பெரியாழ்வார் திருமொழி

## 1, 6

### சப்பாணிப் பருவம்

*மாணிக்கக் கிண்கிணி ஆர்ப்ப, மருங்கின் மேல்*
*ஆணிப் பொன்னாற் செய்த ஆய்பொன் உடை மணி*
*பேணி, பவளவாய் முத்து இலங்க, பண்டு*
*காணி கொண்ட கைகளால் சப்பாணி,*
*கருங்குழற் குட்டனே! சப்பாணி.* 1

*பொன்-அரைநாணொடு மாணிக்கக் கிண்கிணி*
*தன்அரை ஆட, தனிச் சுட்டி தாழ்ந்து ஆட,*
*என்அரை மேல்நின்று இழிந்து உங்கள் ஆயர்தம்*
*மன் அரைமேல் கொட்டாய் சப்பாணி,*
*மாயவனே! கொட்டாய் சப்பாணி.* 2

*பல் மணி முத்து இன்பவளம் பதித்தன்ன*
*என் மணிவண்ணன் இலங்கு பொற் றோட்டின் மேல்*
*நின் மணிவாய் முத்து இலங்க, நின் அம்மைதன்*
*அம்மணி மேல் கொட்டாய் சப்பாணி,*
*ஆழியங் கையனே! சப்பாணி.* 3

*தூ நிலாமுற்றத்தே போந்து விளையாட*
*வான் நிலா அம்புலீ! சந்திரா! வா என்று*
*நீ நிலா, நிற் புகழாநின்ற ஆயர் தம்*
*கோ நிலாவ, கொட்டாய் சப்பாணி,*
*குடந்தைக் கிடந்தானே! சப்பாணி.* 4

புட்டியிற் சேறும் புழுதியும் கொண்டுவந்து
அட்டி அமுக்கி அகம் புக்கு, அறியாமே,
சட்டித் தயிரும் தடாவினில் வெண்ணெயும் உண்
பட்டிக் கன்றே! கொட்டாய் சப்பாணி,
பற்பநாபா! கொட்டாய் சப்பாணி. 5

தாரித்து நூற்றுவர் தந்தை சொற் கொள்ளாது
போர் உய்த்து வந்து புகுந்தவர் மண் ஆளப்
பாரித்த மன்னர் படப் பஞ்சவர்க்கு அன்று
தேர் உய்த்த கைகளால் சப்பாணி,
தேவகி சிங்கமே! சப்பாணி. 6

பரந்திட்டு நின்ற படுகடல் தன்னை
இரந்திட்ட கைம்மேல் எறிதிரை மோதக்
கரந்திட்டு நின்ற கடலைக் கலங்கச்
சரந் தொட்ட கைகளால் சப்பாணி,
சார்ங்க விற் கையனே! சப்பாணி. 7

குரக்கு இனத்தாலே குரைகடல்தன்னை
நெருக்கி அணை கட்டி, நீள்நீர் இலங்கை
அரக்கர் அவிய அடு கணையாலே
நெருக்கிய கைகளால் சப்பாணி,
நேமியங் கையனே! சப்பாணி. 8

அளந்து இட்ட தூணை அவன் தட்ட, ஆங்கே
வளர்ந்திட்டு வாள் உகிர்ச் சிங்க உருவாய்
உளந் தொட்டு, இரணியன் ஒண்மார்வு அகலம்
பிளந்திட்ட கைகளால் சப்பாணி,
பேய் முலை உண்டானே! சப்பாணி. 9

அடைந்திட்டு அமரர்கள் ஆழ்கடல் தன்னை
மிடைந்திட்டு, மந்தரம் மத்தாக நாட்டி,
வடம் சுற்றி, வாசுகி வன்கயிறு ஆகக்
கடைந்திட்ட கைகளால் சப்பாணி,
கார்முகில் வண்ணனே! சப்பாணி. 10

ஆட்கொள்ளத் தோன்றிய ஆயர்தம் கோவினை
நாட் கமழ் பூம்பொழில் வில்லிபுத்தூர்ப் பட்டன்
வேட்கையால் சொன்ன சப்பாணி ஈரைந்தும்
வேட்கையினால் சொல்லுவார் வினை போமே. 11

## பெரியாழ்வார் திருமொழி

### 1, 7

### தளர்நடைப் பருவம்

தொடர் சங்கிலிகை சலார்-பிலார் என்னத்
தூங்கு பொன்மணி ஒலிப்பப்
படு மும்மதப் புனல் சோர வாரணம்
பைய நின்று ஊர்வது போல்,
உடன் கூடிக் கிண்கிணி ஆரவாரிப்ப
உடை மணி பறை கறங்க
தடந் தாளிணை கொண்டு சார்ங்கபாணி
தளர்நடை நடவானோ! 1

செக்கரிடை நுனிக்கொம்பிற் தோன்றும்
சிறுபிறை முளைப் போல
நக்க செந் துவர்வாய்த் திண்ணை மீதே
நளிர் வெண்பல் முளை இலக,
அக்குவடம் உடுத்து ஆமைத்தாலி
பூண்ட அனந்தசயனன்
தக்க மா மணிவண்ணன் வாசுதேவன்
தளர்நடை நடவானோ! 2

மின்னுக் கொடியும் ஓர் வெண் திங்களும்
சூழ் பரிவேடமுமாய்ப்
பின்னற் துலங்கும் அரசிலையும்
பீதகச் சிற்றாடையொடும்,
மின்னிற் பொலிந்த ஓர் கார்முகில் போலக்
கழுத்தினிற் காறையொடும்,
தன்னிற் பொலிந்த இருடிகேசன்
தளர்நடை நடவானோ! 3

கன்னற் குடம் திறந்தால் ஒத்து ஊறிக்
கணகண சிரித்து உவந்து
முன் வந்து நின்று முத்தம் தரும் என்
முகில்வண்ணன் திருமார்வன்
தன்னைப் பெற்றேற்குத் தன்வாய் அமுதம்
தந்து என்னைத் தளிர்ப்பிக்கின்றான் ;
தன் எற்று மாற்றலர் தலைகள் மீதே
தளர்நடை நடவானோ! 4

முன் நல் ஓர் வெள்ளிப் பெருமலைக் குட்டன்
மொடுமொடு விரைந்து ஓடப்
பின்னைத் தொடர்ந்தது ஓர் கருமலைக் குட்டன்
பெயர்ந்து அடியிடுவது போல்,
பன்னி உலகம் பரவி ஓவாப் புகழ்ப்
பலதேவன் என்னும்
தன் நம்பி ஓடப் பின் கூடச் செல்வான்
தளர்நடை நடவானோ! 5

ஒரு காலிற் சங்கு ஒரு காலிற் சக்கரம்
உள்ளடி பொறித்து அமைந்த
இரு காலுங் கொண்டு, அங்கு அங்கு எழுதினாற்போல்,
இலச்சினை பட நடந்து,
பெருகாநின்ற இன்ப-வெள்ளத்தின்மேல்
பின்னையும் பெய்து பெய்து,
கரு கார்க் கடல்வண்ணன் காமர் தாதை
தளர்நடை நடவானோ! 6

படர் பங்கைய மலர்வாய் நெகிழப்
பனி படு சிறுதுளி போல்
இடங் கொண்ட செவ்வாய் ஊறி ஊறி
இற்று இற்று வீழநின்று,
கடுஞ் சேக் கழுத்தின் மணிக்குரல் போல்
உடை மணி கணகணென,
தடந் தாளிணை கொண்டு சாரங்கபாணி
தளர்நடை நடவானோ! 7

பக்கம் கருஞ் சிறுப்பாறை மீதே
அருவிகள் பகர்ந்தனைய
அக்குவடம் இழிந்து ஏறித் தாழ,
அணி அல்குல் புடை பெயர,
மக்கள் உலகினிற் பெய்து அறியா
மணிக் குழவி உருவின்
தக்க மா மணிவண்ணன் வாசுதேவன்
தளர்நடை நடவானோ! 8

வெண் புழுதி மேற் பெய்துகொண்டு அளைந்தது ஓர்
வேழத்தின் கருங்கன்று போல்
தெண் புழுதியாடி, திரிவிக்கிரமன்
சிறு புகர்பட வியர்த்து
ஒண் போது அலர்கமலச் சிறுக்கால் உறைத்து
ஒன்றும் நோவாமே
தண் போது கொண்ட தவிசின் மீதே
தளர்நடை நடவானோ! 9

திரை நீர்ச் சந்திர மண்டலம் போலச்
செங்கண்மால் கேசவன் தன்
திரு நீர் முகத்துத் துலங்கு சுட்டி
திகழ்ந்து எங்கும் புடைபெயர,
பெரு நீர்த் திரை எழு கங்கையிலும்
பெரியதோர் தீர்த்த பலம்
தரு நீர்ச் சிறுச்சண்ணம் துள்ளம் சோரத்
தளர்நடை நடவானோ! 10

ஆயர் குலத்தினில் வந்து தோன்றிய
அஞ்சன வண்ணன் தன்னைத்
தாயர் மகிழ ஒன்னார் தளரத்
தளர்நடை நடந்ததனை
வேயர் புகழ் விட்டுசித்தன் சீரால்
விரித்தன உரைக்கவல்லார்
மாயன் மணிவண்ணன் தாள் பணியும்
மக்களைப் பெறுவர்களே. 11

## பெரியாழ்வார் திருமொழி

### 1, 8

#### அச்சோப் பருவம்

பொன் இயல் கிண்கிணி சுட்டி புறங் கட்டித்
தன் இயல் ஓசை சலன்-சலன் என்றிட
மின் இயல் மேகம் விரைந்து எதிர் வந்தாற்போல்
என் இடைக்கு ஓட்டரா, அச்சோ! அச்சோ!
எம்பெருமான் வாராய், அச்சோ! அச்சோ! 1

செங்கமலப் பூவிற் தேன் உண்ணும் வண்டே போல்
பங்கிகள் வந்து உன் பவளவாய் மொய்ப்ப,
சங்கு வில் வாள் தண்டு சக்கரம் ஏந்திய
அங்கைகளாலே வந்து அச்சோ! அச்சோ!
ஆரத் தழுவாய் வந்து, அச்சோ! அச்சோ!

பஞ்சவர் தூதனாய்ப் பாரதம் கைசெய்து,
நஞ்சு உமிழ் நாகம் கிடந்த நற் பொய்கை புக்கு,
அஞ்சப் பணத்தின்மேல் பாய்ந்திட்டு அருள்செய்த
அஞ்சனவண்ணனே! அச்சோ! அச்சோ!
ஆயர் பெருமானே! அச்சோ! அச்சோ!

நாறிய சாந்தம் நமக்கு இறை நல்கு என்னத்
தேறி அவளும் திருவுடம்பிற் பூச,
ஊறிய கூனினை உள்ளே ஒடுங்க அன்று
ஏற உருவினாய்! அச்சோ! அச்சோ!
எம்பெருமான்! வாராய்; அச்சோ! அச்சோ!

கழல் மன்னர் சூழக் கதிர் போல் விளங்கி
எழலுற்று மீண்டே இருந்து உன்னை நோக்கும்
சுழலை பெரிது உடைத் துச்சோதனனை
அழல விழித்தானே! அச்சோ! அச்சோ!
ஆழி அங் கையனே! அச்சோ! அச்சோ!

போர் ஒக்கப் பண்ணி இப் பூமிப்பொறை தீர்ப்பான்
தேர் ஒக்க ஊர்ந்தாய் செழுந்தார் விசயற்காய்;
கார் ஒக்கு மேனிக் கரும் பெருங் கண்ணனே!
ஆரத் தழுவாய் வந்து, அச்சோ! அச்சோ!
ஆயர்கள் போரேறே! அச்சோ! அச்சோ!

மிக்க பெரும் புகழ் மாவலி வேள்வியில்
தக்கது இது அன்று என்று தானம் விலக்கிய
சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய
சக்கரக் கையனே! அச்சோ! அச்சோ!
சங்கம் இடத்தானே! அச்சோ! அச்சோ!

என் இது மாயம்? என் அப்பன் அறிந்திலன்;
முன்னைய வண்ணமே கொண்டு அளவாய் என்ன,
மன்னு நமுசியை வானிற் சுழற்றிய
மின்னு முடியனே! அச்சோ! அச்சோ!
வேங்கடவாணனே! அச்சோ! அச்சோ!

கண்ட கடலும் மலையும் உலகு ஏழும்
முண்டத்துக்கு ஆற்றா, முகில்வண்ணா! ஓ! என்று
இண்டைச் சடைமுடி ஈசன் இரக்கொள்ள,
மண்டை நிறைத்தானே! அச்சோ! அச்சோ!
மார்வில் மறுவனே! அச்சோ! அச்சோ! 9

துன்னிய பேரிருள் சூழ்ந்து உலகை மூட
மன்னிய நான்மறை முற்றும் மறைந்திடப்
பின் இவ் உலகினில் பேரிருள் நீங்க அன்று
அன்னமது ஆனானே! அச்சோ! அச்சோ!
அருமறை தந்தானே! அச்சோ! அச்சோ! 10

நச்சுவார் முன் நிற்கும் நாராயணன்தன்னை
அச்சோ வருக என்று ஆய்ச்சி உரைத்தன
மச்சு அணி மாடப் புதுவைக்கோன் பட்டன் சொல்
நிச்சலும் பாடுவார் நீள் விசும்பு ஆள்வரே. 11

## பெரியாழ்வார் திருமொழி

## 1, 9

### புறம் புல்கல்

வட்டு நடுவே வளர்கின்ற மாணிக்க-
மொட்டு நுனையில் முளைக்கின்ற முத்தே போல்
சொட்டுச் சொட்டு என்னத் துளிக்கத் துளிக்க என்
குட்டன் வந்து என்னைப் புறம்புல்குவான்,
கோவிந்தன் என்னைப் புறம்புல்குவான். 1

கிண்கிணி கட்டிக் கிறி கட்டிக் கையினிற்
கங்கணம் இட்டுக் கழுத்திற் தொடர் கட்டித்
தன் கணத்தாலே சதிரா நடந்து வந்து
என் கண்ணன் என்னைப் புறம்புல்குவான்,
எம்பிரான் என்னைப் புறம்புல்குவான். 2

கத்தக் கதித்துக் கிடந்த பெருஞ்செல்வம்
ஒத்துப் பொருந்திக்கொண்டு உண்ணாது மண் ஆள்வான்
கொத்துத் தலைவன் குடிகெடந் தோன்றிய
அத்தன் வந்து என்னைப் புறம்புல்குவான்,
ஆயர்கள் ஏறு என் புறம்புல்குவான். 3

நாந்தகம் ஏந்திய நம்பி! சரண் என்று
தாழ்ந்த தனஞ்சயற்கு ஆகி, தரணியில்
வேந்தர்கள் உட்க விசயன் மணித் திண்தேர்
ஊர்ந்தவன் என்னைப் புறம்புல்குவான்,
உம்பர்கோன் என்னைப் புறம்புல்குவான். 4

வெண்கலப் பத்திரம் கட்டி விளையாடிக்
கண் பல பெய்த கருந்தழைக் காவின் கீழ்ப்
பண் பல பாடிப் பல்லாண்டு இசைப்ப, பண்டு
மண் பல கொண்டான் புறம்புல்குவான்,
வாமனன் என்னைப் புறம்புல்குவான். 5

சத்திரம் ஏந்தித் தனி ஒரு மாணியாய்
உத்தர வேதியில் நின்ற ஒருவனைக்
கத்திரியர் காணக் காணி முற்றும் கொண்ட
பத்திராகாரன் புறம்புல்குவான்,
பார் அளந்தான் என் புறம்புல்குவான். 6

பொத்த உரலைக் கவிழ்த்து, அதன்மேல் ஏறி,
தித்தித்த பாலும் தடாவினில் வெண்ணெயும்
மெத்தத் திருவயிறு ஆர விழுங்கிய
அத்தன் வந்து என்னைப் புறம்புல்குவான்,
ஆழியான் என்னைப் புறம்புல்குவான். 7

மூத்தவை காண முது மணற்குன்று ஏறிக்
கூத்து உவந்து ஆடிக் குழலால் இசை பாடி,
வாய்த்த மறையோர் வணங்க இமையவர்
ஏத்த வந்து, என்னைப் புறம்புல்குவான்,
எம்பிரான் என்னைப் புறம்புல்குவான். 8

கற்பகக் காவு கருதிய காதலிக்கு
இப்பொழுது ஈவன் என்று இந்திரன் காவினில்
நிற்பன செய்து நிலாத் திகழ் முற்றத்துள்
உய்த்தவன் என்னைப் புறம்புல்குவான்,
உம்பர்கோன் என்னைப் புறம்புல்குவான். 9

ஆய்ச்சி அன்று ஆழிப் பிரான் புறம்புல்கிய
வேய்த் தடந்தோளி சொல் விட்டுசித்தன் மகிழ்ந்து
ஈத்த தமிழ் இவை ஈரைந்தும் வல்லவர்
வாய்த்த நன்மக்களைப் பெற்று மகிழ்வரே. 10

# பெரியாழ்வார் திருமொழி

## 2, 1

### கண்ணன் அப்பூச்சி காட்டுதல்

மெச்சு ஊது சங்கம் இடத்தான் நல் வேய் ஊதி
பொய்ச் சூதிற் தோற்ற பொறை உடை மன்னர்க்காய்,
பத்து ஊர் பெறாது அன்று பாரதம் கைசெய்த
அத் தூதன் அப்பூச்சி காட்டுகின்றான் ;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான். 1

மலை புரை தோள் மன்னவரும் மாரதரும் மற்றும்
பலர் குலைய நூற்றுவரும் பட்டழிய, பார்த்தன்
சிலை வளையத் திண்தேர்மேல் முன்நின்ற செங்கண்
அலவலை வந்து அப்பூச்சி காட்டுகின்றான் ;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான். 2

காயும் நீர் புக்குக் கடம்பு ஏறி, காளியன்
தீய பணத்திற் சிலம்பு ஆர்க்கப் பாய்ந்து ஆடி,
வேயின் குழல் ஊதி வித்தகனாய் நின்ற
ஆயன் வந்து அப்பூச்சி காட்டுகின்றான்;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான். 3

இருட்டிற் பிறந்து போய், ஏழை வல் ஆயர்
மருட்டைத் தவிர்ப்பித்து, வன் கஞ்சன் மாளப்
புரட்டி, அந்நாள் எங்கள் பூம்பட்டுக் கொண்ட
அரட்டன் வந்து அப்பூச்சி காட்டுகின்றான் ;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான். 4

சேப் பூண்ட சாடு சிதறித் திருடி, நெய்க்கு
ஆப்பூண்டு, நந்தன் மனைவி கடை தாம்பால்
சோப்பூண்டு, துள்ளித் துடிக்கத் துடிக்க அன்று
ஆப்பூண்டான் அப்பூச்சி காட்டுகின்றான் ;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான். 5

செப்பு இள மென்முலைத் தேவகி நங்கைக்குச்
சொப்படத் தோன்றி, தொறுப்பாடியோம் வைத்த
துப்பமும் பாலும் தயிரும் விழுங்கிய
அப்பன் வந்து அப்பூச்சி காட்டுகின்றான் ;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான். 6

தத்துக் கொண்டாள் கொலோ? தானே பெற்ருள் கொலோ?
சித்தம் அனையாள் அசோதை இளஞ் சிங்கம்
கொத்து ஆர் கருங்குழற் கோபால கோளரி
அத்தன் வந்து அப்பூச்சி காட்டுகின்ருன் ;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்ருன். 7

கொங்கை வன் கூனிசொற் கொண்டு, குவலயத்
துங்கக் கரியும் பரியும் இராச்சியமும்
எங்கும் பரதற்கு அருளி, வன்கான் அடை
அங் கண்ணன் அப்பூச்சி காட்டுகின்ருன் ;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்ருன். 8

பதக முதலைவாய்ப் பட்ட களிறு
கதறிக் கைகூப்பி என் கண்ணு! கண்ணு! என்ன
உதவப் புள் ஊர்ந்து அங்கு உறுதுயர் தீர்த்த
அதகன் வந்து அப்பூச்சி காட்டுகின்ருன் ;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்ருன். 9

வல்லாள் இலங்கை மலங்கச் சரந் துரந்த
வில்லாளனை விட்டுசித்தன் விரித்த
சொல் ஆர்ந்த அப்பூச்சிப் பாடல் இவை பத்தும்
வல்லார் போய் வைகுந்தம் மன்னி இருப்பரே. 10

## பெரியாழ்வார் திருமொழி

## 2, 2

### தாய்ப்பால் உண்ண அழைத்தல்

அரவு அணையாய்! ஆயர் ஏறே!
அம்மம் உண்ணத் துயிலெழாயே!
இரவும் உண்ணது உறங்கி நீ போய்,
இன்றும் உச்சி கொண்டதாலோ ;
வரவுங் காணேன் ; வயிறு அசைந்தாய் ;
வன முலைகள் சோர்ந்து பாயத்
திரு உடைய வாய்மடுத்துத்
திளைத்து உதைத்துப் பருகிடாயே. 1

வைத்த நெய்யும் காய்ந்த பாலும்
வடி தயிரும் நறு வெண்ணெயும்
இத்தனையும் பெற்றறியேன்
எம்பிரான் நீ பிறந்த பின்னை ;
எத்தனையும் செய்யப் பெற்றாய் ;
ஏதும் செய்யேன், கதம் படாதே ;
முத்து அனைய முறுவல் செய்து
மூக்கு உறிஞ்சி முலை உணாயே. 2

தந்தம் மக்கள் அழுது சென்றால்
தாய்மார் ஆவார் தரிக்ககில்லார் ;
வந்து நின்மேற் பூசல் செய்ய
வாழ வல்ல வாசுதேவா!
உந்தையார் உன் திறத்தர் அல்லர் ;
உன்னை நான் ஒன்று உரப்பமாட்டேன் ;
நந்தகோபன் அணி சிறுவா!
நான் சுரந்த முலை உணாயே. 3

கஞ்சன் தன்னால் புணர்க்கப்பட்ட
கள்ளச் சகடு கலக்கு அழிய,
பஞ்சி அன்ன மெல்லடியால்
பாய்ந்த போது நொந்திடும் என்று
அஞ்சினேன் காண் ; அமரர் கோவே!
ஆயர் கூட்டத்து அளவன்றாலோ!
கஞ்சனை உன் வஞ்சனையால்
வலைப்படுத்தாய்! முலை உணாயே. 4

தீய புந்திக் கஞ்சன் உன்மேல்
சினம் உடையன் சோர்வு பார்த்து
மாயந்தன்னால் வலைப்படுக்கில்,
வாழகில்லேன், வாசுதேவா!
தாயர் வாய்ச்சொல் கருமம் கண்டாய்,
சாற்றிச் சொன்னேன், போகவேண்டா ;
ஆயர் பாடிக்கு அணிவிளக்கே!
அமர்ந்து வந்து என் முலை உணாயே. 5

மின் அனைய நுண் இடையார்
விரி குழல்மேல் நுழைந்த வண்டு
இன் இசைக்கும் வில்லிபுத்தூர்
இனிது அமர்ந்தாய்! உன்னைக் கண்டார்
என்ன நோன்பு நோற்றாள் கொலோ
இவனைப் பெற்ற வயிறு உடையாள்
என்னும் வார்த்தை எய்துவித்த
இருடிகேசா! முலை உணாயே. 6

பெண்டிர் வாழ்வார் நின் ஒப்பாரைப்
பெறுதும் என்னும் ஆசையாலே
கண்டவர்கள் போக்கு ஒழிந்தார் ;
கண்ணிணையால் கலக்க நோக்கி
வண்டு உலாம் பூங்குழலினார் உன்
வாயமுதம் உண்ண வேண்டிக்
கொண்டு போவான் வந்து நின்றார் ;
கோவிந்தா! நீ முலை உணாயே. 7

இரு மலை போல் எதிர்ந்த மல்லர்
இருவர் அங்கம் எரிசெய்தாய்! உன்
திரு மலிந்து திகழு மார்வு
தேக்க வந்து என் அல்குல் ஏறி
ஒரு முலையை வாய்மடுத்து
ஒரு முலையை நெருடிக்கொண்டு
இரு முலையும் முறை முறையாய்
ஏங்கி ஏங்கி இருந்து உணாயே. 8

அம் கமலப் போதகத்தில்
அணி கொள் முத்தம் சிந்தினாற்போல்
செங் கமல முகம் வியர்ப்ப,
தீமை செய்து இம் முற்றத்தூடே
அங்கம் எல்லாம் புழுதியாக
அளைய வேண்டா; அம்ம! விம்ம
அங்கு அமரர்க்கு அமுது அளித்த
அமரர் கோவே! முலை உணாயே. 9

ஓட ஓடக் கிண்கிணிகள்
ஒலிக்கும் ஓசைப் பாணியாலே
பாடிப் பாடி வருகின்றாயைப்
பற்பநாபன் என்று இருந்தேன்;
ஆடி ஆடி அசைந்து அசைந்திட்டு
அதனுக்கு ஏற்ற கூத்தை ஆடி
ஓடி ஓடிப் போய்விடாதே,
உத்தமா! நீ முலை உணாயே. 10

வார் அணிந்த கொங்கை ஆய்ச்சி
மாதவா! உண் என்ற மாற்றம்
நீர் அணிந்த குவளை வாசம்
நிகழ நாறும் வில்லிபுத்தூர்ப்
பார் அணிந்த தொல் புகழான்
பட்டர்பிரான் பாடல் வல்லார்
சீர் அணிந்த செங்கண்மால் மேல்
சென்ற சிந்தை பெறுவர் தாமே. 11

## பெரியாழ்வார் திருமொழி

## 2, 3

### காது குத்தல்

போய்ப்பாடு உடைய நின் தந்தையும் தாழ்த்தான்,
பொரு திறற் கஞ்சன் கடியன்,
காப்பாரும் இல்லை, கடல்வண்ணா! உன்னை;
தனியே போய் எங்கும் திரிதி;
பேய்ப்பால் முலை உண்ட பித்தனே! கேசவ-
நம்பீ! உன்னைக் காது குத்த
ஆய்ப் பாலர் பெண்டுகள் எல்லாரும் வந்தார்:
அடைக்காய் திருத்தி நான் வைத்தேன். 1

வண்ணப் பவளம் மருங்கினிற் சாத்தி
மலர்ப்பாதக் கிண்கிணி ஆர்ப்ப,
நண்ணித் தொழும் அவர் சிந்தை பிரியாத
நாராயணா! இங்கே வாராய்;
எண்ணற்கு அரிய பிரானே! திரியை
எரியாமே காதுக்கு இடுவன்;
கண்ணுக்கு நன்றும் அழகும் உடைய
கனகக் கடிப்பும் இவையாம். 2

வையம் எல்லாம் பெறும் வார்கடல் வாழும்
மகரக்குழை கொண்டுவைத்தேன் ;
வெய்யவே காதில் திரியை இடுவன், நீ
வேண்டியதெல்லாம் தருவன் ;
உய்ய இவ் ஆயர் குலத்தினில் தோன்றிய
ஒண்சுடர் ஆயர்கொழுந்தே!
மையன்மை செய்து இள ஆய்ச்சியர் உள்ளத்து,
மாதவனே! இங்கே வாராய். 3

வணம் நன்று உடைய வயிரக் கடிப்பு இட்டு
வார்காது தாழப் பெருக்கிக்
குணம் நன்று உடையர் இக் கோபால பிள்ளைகள் ;
கோவிந்தா! நீ சொல்லுக் கொள்ளாய் ;
இணை நன்று அழகிய இக் கடிப்பு இட்டால்
இனிய பலாப்பழம் தந்து
சுணம் நன்று அணி முலை உண்ணத் தருவன் நான் ;
சோத்தம், பிரான்! இங்கே வாராய். 4

சோத்தம், பிரான்! என்று இரந்தாலும் கொள்ளாய் ;
சுரிகுழலாரொடு நீ போய்க்
கோத்துக் குரவை பிணைந்து இங்கு வந்தால்,
குணங்கொண்டு இடுவனோ? நம்பீ!
பேர்த்தும் பெரியன அப்பம் தருவன்,
பிரானே! திரியிட ஒட்டில் ;
வேய்த் தடந்தோளார் விரும்பும் கருங்குழல்
விட்டுவே! நீ இங்கே வாராய். 5

விண்ணெல்லாம் கேட்க அழுதிட்டாய், உன்வாயில்
விரும்பி அதனை நான் நோக்கி
மண்ணெல்லாம் கண்டு என் மனத்துள்ளே அஞ்சி
மதுசூதனே என்று இருந்தேன் ;
புண் ஏதும் இல்லை, உன்காது மறியும் ;
பொறுத்து இறைப் போது இரு, நம்பீ!
கண்ணா! என் கார்முகிலே! கடல்வண்ணா!
காவலனே! முலை உணாயே. 6

